# திராவிடப் பிரகாசிகை

என்னும்

# தமிழ் வரலாறு



ஆசிரியர் :

சிவத்திரு சபாபதி நாவலர் அவர்கள்

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்.
1/140, பிரகாசம் சாலை, சென்னை-1.
1976

சிவத்திரு சபாபதி நாவலர்

© 1976 THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LIMITED

கிளைகள் :

திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம் திருச்சிராப்பள்ளி-2

கழக வெளியீடு : ககஅ

முதற் பதிப்பு : (கழகம்) சனவரி 1960

மறுபதிப்பு : மே 1976




DRAVIDAP PRAKASIKAI


திருவரங்கனார் அச்சகம், சென்னை-600018. (1)


# பதிப்புரை

திராவிடப் பிரகாசிகை என்பது நூற் பெயர். இதனை இயற்றிய ஆசிரியர் பெயர் சபாபதி நாவலர் என்பது, அவர் வடமொழியுங் கற்றதனால் வடமொழிப் பெயரிட்டார் இந்நூற்கு. திராவிடம்—தமிழ். பிரகாசிகை - விளக்கத்தையுடையது. எனவே தமிழ் மொழியிலுள்ள இலக்கணம் இலக்கியம் ஆகிய நூல்களின்விளக்கத்தையே பொருளாகக் கொண்டது இந்நூல் என்று கருத்தில் இருத்துக. இந்நூலை முறையாகக் கற்றவர் நமது தமிழ் மொழியின்கண் உள்ள இலக்கணம் இலக்கியம் எல்லாவற்றிற்கும் விளக்கங் கூறுதல் எளிதின் இயலும். ஒவ்வொரு நூலினையும் பாகுபடுத்து இவர் விளக்குமுறை மிகவும் புதுமையானது.

இந்நூல் இவ்வகையைச் சார்ந்தது; இதனை இயற்றிய ஆசிரியர் பெயர் இது; காலம் இன்னது; இந்நூலின் பெயர் இது; பெயர் வந்த காரணம் இது; இத்துணைப் பாடுடையது; அதிகாரம் இத்தனை; படலங்கள் இத்தனை; பாடல்கள் இத்தனை; அதிகாரங்களிலமைந்துள்ள பொருள்கள் இவை; படலங்களிலமைந்த பொருள்கள் இவை; முறைவைப்பிற்குக் காரணம் இன்னது; இது முதனூல், வழிநூல், சார்புநூல்களில் இன்னது; இதனைக் கற்றதனால் விளையும் பயன் இது என எளிதில் யாவரும் உணரும்படி செந்தமிழ் நூல்களின் முந்துநூல் முதல் பிந்து நூல்கள் வரை ஆராய்ந்து விளக்கங்கூறுகின்றார். இந்நூலின் அருமையும் பெருமையும் கற்றவர்க்கே தோன்றும். பல இலக்கண நூல்களையும்பல இலக்கிய நூல்களையும்பொருள் கொடுத்து வாங்கிப் பல ஆண்டுகள் கற்று அவற்றின் விளக்கங் காண்பதினும் இவ்வொருநூலை மட்டும் வாங்கி இவர் விளக்கியுள்ள முறையையாய்ந்து எளிதில் விளக்கங் காணலாம் என்பது ஒருதலை.

இவர் இந்நூலினை ஐந்தியல்களாக வகுத்துள்ளார், தமிழ் மரபியல், இலக்கண மரபியல், இலக்கிய மரபியல், சாத்திர மரபியல், ஒழிபியல் என்பன அவற்றின் பெயர் முறை. தமிழ் மொழி முதலில் தோன்றிய வரலாறு முதல் தற்கால நிலை வரையும் கூறி அதன் சிறப்பும் பெருமையும் கூறுகின்றார். தமிழின் தெய்வத்தன்மை, தமிழ் மொழியின் தொன்மை, தமிழ் என்ற பெயர்க் காரணம் வடமொழி தென்மொழி என்பவற்றின் ஒற்றுமை வேற்றுமை, தமிழ் மொழியின் சிறப்பு, உயர்வு, செம்மை, பிறமொழிக் கலப்பின்றி வழங்கும் வன்மை; தெய்வமும் தமிழ்மொழியை விழைந்த சீர்மை இவையனைத்தும் தமிழ் மரபியலிற் காணலாம்.

இலக்கணமரபியலில் அகத்தியம், தொல்காப்பியம், களவியல் என்ற இறையனாரகப் பொருள், பன்னிரு படலம், வெண்பாமாலை, அகப்பொருள் விளக்கம், யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை, வெண்பாப் பாட்டியல், தண்டியலங்காரம், நேமிநாதம், வீரசோழியம், நன்னூல், பிரயோகவிவேகம், இலக்கண விளக்கம், இலக்கணக் கொத்து, இலக்கண விளக்கச்சூறாவளி, தொல்காப்பியப் பாயிர விருத்தி, முதற் சூத்திர விருத்தி என்ற இலக்கண நூல்கள் அனைத்தும் ஆராயப்பட்டு நன்கு விளக்கப் பட்டுள்ளன. தொல்காப்பியத்திற்கு உரைவரைந்த ஆசிரியர் பெயர்களும் அவர் கூறிய உரைகளும் ஒருவரையொருவர் மறுக்கும் மறுப்பும் அதன் முடிபும் வினா விடைகளால் நன்கு விளக்கியுள்ளார். அகத்திணையியலில் கைக்கிளைமுதல் பெருந்திணையீறாகவுள்ள ஏழு திணைகள், முதற் பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற பொருள்கள் யாவும் நன்கு விளக்கப் படுகின்றன. புறத்திணையியலிற் கூறிய வெட்சி முதல் பாடாண்டிணையிறுதியாய எழுதிணைகளும் அவற்றிற் குரிய துறைகளும் அகத்திற்கும் புறத்திற்கும் உள்ள இயைபும் எடுத்து விளக்கியுள்ளார்.



இலக்கியமரபியலில் திருமுறையிலக்கியம், சங்க விலக்கியம், காவிய விலக்கியம், புராண விலக்கியம், இதிகாசவிலக்கியம், பலவகைப்பிரபந்த விலக்கியம் எனப் பகுத்து ஒவ்வொன்றையும் விளக்குமுறை புலவர்க்குக் காணுந் தோறும் களிப்பூட்டும். பன்னிருதிருமுறை வைப்பு ஆராய்ச்சியும் திருவாசகம் திருக்கோவையார் எட்டாந் திருமுறையாவெண்ணப்படுவதற்குரிய காரணமும் வினாவிடைகளால் விளக்கியிருப்பது எத்தகைய புலவரும் வியக்கத்தக்க செயலாம். இறைவன் வாய்மொழியே இருக்கு முதலிய நால் வேதங்கள் எனவும், திருமுறைகளை வேதமென்று ஓதுதலே மரபு எனவும், அவை தமிழ் வேதங்கள் எனவும், திரு வருட்பாக்கள் எனவும், வைதிக சைவநூல்கள் எனவும் தக்க சான்று காட்டி நிறுவியிருப்பது ஆசிரியர் இருமொழிப் புலமையுடையார் என்பதை எடுத்துக் காட்டுகின்றது.

திருக்குறள் ஆராய்ச்சியும் அகரமுதல் என்ற முதற் குறளுக்குக் கூறிய விருத்தியுரையும் கடைச்சங்கப் புலவர் காலத்துத் திருக்குறள் அரங்கேறியதும், வள்ளுவர் மாலை அக்காலத்துத்தான் பாடப்பட்டது என்பதற் குரிய காரணங்களும் பிறவும் இலக்கிய மரபியலிற் காணலாம். அகரவெழுத்துக்கும் ஆதிபகவனுக்கும் உள்ள பொதுத் தன்மையைத் தடைவிடைகளால் விளக்கிச் சிவபரத்துவம் நிலைநாட்டியவன்மை கற்றவர் கருத்துக்குப் பொருத்தமான புது விருந்தாகும்.

சாத்திரமரபியலில் பதினொண் சாத்திரங்களும், அவற்றின் பெயர் முறைகளும், அவை கூறும் பொருள் களும், வைதிகசாத்திரமும், அவற்றின் உட்பிரிவுகளும் ஆசிரியர்களும், வேதநூல், சைவநூல் என்றிரண்டே நூல்கள் என்பதன் விளக்கமும், தத்துவங்களும், வேதாந்த சாத்திரங்களின் வகைகளும், அவ்வந்நூல் செய்த ஆசிரியர் பெயரும், மாயாவாதம், பாற்கரியவாதம் கிரீடாப்பிரமவாதம் சத்தப்பிரமவாதம் என்பவற்றை வட மொழிநூல் வழியே விரித்துக் காட்டியிருப்பதும் நாவலரது

மதி நுட்பத்தையும் திட்பத்தையும் தெளித்துக்காட்டும்.
சைவசமயத்துக்குரிய பதினான்கு சாத்திரங்களையும் தனித்
தனி எடுத்து விளக்கிச் சிவஞானபோதச்சிறப்பும்
அதனுட் கூறும் சரியை கிரியை யோகம் ஞானம் ஆகிய
பாதங்களின் பண்புவிளக்கிப் பயனுங் கூறும் முறையை
யாய்ந்தால் சைவசமயத்தில் தனிப்பற்றுடையார்
நூலாசிரியர் என்பது நன்குபுலப்படும்.

ஒழிபியலில் கல்விச்சிறப்பு, கற்பிக்கும் நல்லாசிரியர்
இயல்பு, நன்மாணாக்கர் இயல்பு, கற்குமுறை, கற்கும்
நூன்முறை, கல்வியறிவின்பயன் இவை விளக்கப்படு
கின்றன. மாணவர்கள் நூல்பயிலுமுறையில் ''ஆத்திச்சூடி
கொன்றைவேந்தன், முதலிய உலகநெறிநூல்கள் கற்க
வேண்டும் அதன்பின் முதுமொழிவெண்பா நீதிநெறி
விளக்கம் நாலடிமுதலியநூல் கற்கவேண்டும், பின் சைவ
சமயத்தினர் அச்சமயத்துக் குரிய சமயதீக்கை பெற
வேண்டும், வைணவ சமயத்தார் அதற்குரிய வைணவ
சமஸ்காரம் பெற வேண்டும், பின்னர் தமிழ் இலக்கணச்
சுருக்கங் கற்கவேண்டும்; புராணம் பலகற்க வேண்டும்;
பின்னர் இலக்கணக்கல்வி கற்கவேண்டும், அதன்பின்
ஆராய்ச்சித் துறையில் இறங்கி ஒவ்வொருநூலையும்
ஆய்ந்து புலமை நிரப்பிக் கொள்ளவேண்டும்'' என்று
வரிசைப் படுத்தியிருப்பது ஆசிரியர் இளமையிற் கல்வி
பயின்ற முறைபோலும் என எண்ணுதற்கு இடம்
அளிக்கின்றது.

வித்துவான் வகுப்பு, புலவர் வகுப்பு என்ற வகுப்புக்
களிற் பயின்று பட்டம் பெற நினைக்கும் மாணவர் ஒவ்
வொருவரும் இதனை வாங்கி ஒருமுறை படித்தால் இலக்
கண விலக்கியங்கள் எல்லாவற்றின் இயல்பும் பொதுவாக
அறிந்து பின்னர் ஒவ்வொரு நூலையும் பயில்வதற்கு
ஊக்க முண்டாகும். தமிழின் பெருமை, இலக்கணங்
களின் நுண்மை இலக்கியங்களின் வண்மை, வேண்டத்
தக்கவிடத்து அளவைமுறைக்குமாறின்றி மறுப்புரை
கூறும்வன்மைஇவை யெல்லாம்தானேவரும். வடமொழிப்



புலமையும் சிறிது தோன்றும். புலவர்கட்கு இன்றியமை
யாது வேண்டத்தக்க சிறந்த ஆராய்ச்சி நூல் இது.

இந்நூல் முதற்பதிப்பாக நூலாசிரியர் வாழ்ந்த
காலத்துக் கி. பி. 1899இல் அச்சிற் பதித்து வெளியிடப்
பட்டது. இரண்டாம் பதிப்பு கி பி. 1927இல் நாவலர்
மருகர் அ. சிவகுருநாத பிள்ளையவர்களாற் பதித்து
வெளியிடப்பட்டது.

எமது கழகத்தின் வாயிலாக மூன்றாம் பதிப்பு
1961ஆம் ஆண்டில் வெளிவந்தது. இது நான்காம்
பதிப்பு. இந் நூல் பலர்க்கும் பயன்படத்தக்கதென
ஆய்ந்து எளிதிற் பொருள் விளங்காத சொற்
றொடர்களைப் பிரித்துக் காட்டியும், மேற்கோட்பாக்களைச்
சீர் பிரித்து அடிதோன்றும் படி நிறுவியும், எழுத்துப்
பிழைகளை ஆய்ந்து திருத்தியும், படிப்பவர் மனம்
படியும்படி அழகிய எழுத்து வடிவங்களில் அமைத்தும்
புதிய முறையில் எழிலுறப் பதித்தனம். இப் புத்தகமும்
நல்வடிவில் அமைந்துள்ளது.

பண்டை நக்கீரரின் தனித்தமிழ்ச் சீரிய நடை
யினையும், பின்றைச் சிவஞான முனிவரனின் நுண்
மாண் அகலப் பெருமித நடையினையும் ஒருங்குதன்
னகத்துக் கொண்டு திகழும் ஒருபெருநூல் இதுவாகும்.
இந்நூல் பல்கலைக்கழகத்தார், பி. ஏ., எம். ஏ வகுப்புக்
குரிய துணைப் பாடமாக வைக்குந் தகைவாய்ந்தது. வித்து
வான் புலவர் வகுப்புக்கட்கும் பாடமாக வைத்தற்
குரியது.

தமிழ்ப் புலமை விழையும் சான்றோர் அனைவரும்
திராவிடப் பிரகாசிகை என்னும் இந்நூலை வாங்கிக்
கற்றும் கற்பித்தும் தமிழ் மொழிவளர்த்துத் தனிச்சிறப்
பெய்த வேண்டுகிறோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# நூலாசிரியர் வரலாறு

## தோற்றம்

திராவிடப் பிரகாசிகை என்னும் இந்நூலை யியற்றிய ஆசிரியர் சபாபதி நாவலர் என்பவர். பொன்னிலங்கை யென்றும் தென்னிலங்கை யென்றும் புலவராற் புகழப்பட்ட இலங்கையில் வடபாலுள்ள யாழ்ப்பாணத்து வட்கோவை என்னும் ஊர் இவர் தோன்றியது. குலம், சைவ வேளாளர்குலம். தந்தையார் பெயர் சுயம்புநாத பிள்ளை, தாயார் பெயர் தெய்வயானையம்மையார். சாலிவாகன சகாப்தம் ௧௭௬௬ (கி.பி.1844) இவர் தோன்றிய ஆண்டு. பிள்ளைத் திருப்பெயர் சபாபதி என்பது. கற்று வல்லவராய்ச் சொற்போர் புரியும் நாவன்மையும் அவையோர் வியக்கச் சொற்பொழிவாற்றும் நாவன்மையும் கண்டு, திருவாவடுதுறை யாதீனம் சுப்பிரமணிய தேசிக சுவாமிகளாற் பாராட்டியளிக்கப் பெற்ற பட்டப்பெயர் நாவலர் என்பது.

## இளமையும் கல்வியும்

இளமைப் பருவத்தே தாய்தந்தையர் வடகோவையில் ஓர் ஆசிரியர்பாற் கல்வி பயில்வித்தனர். பள்ளிக் கல்வி பயின்று முற்றியபின் இலக்கணம் இலக்கியம் கற்பிக்க எண்ணினர். வடமொழியினும் தமிழ் மொழியினும் வல்லுநராய நீர்வேலிச் சிவசங்கர பண்டிதர்பால் விடுத்தனர். ஆங்குச் சில யாண்டுகள் தங்கி வடமொழி தென்மொழி இலக்கண வரம்பும் இலக்கிய வரம்பும் ஆய்ந்து இருமொழிப் புலமையும் இயைந்து சிறப்பெய்தினர். அரசியல் மொழியாகிய ஆங்கிலமும் சிலகாலம் கற்று அறிந்தார்.



## ஞான நூற் கல்வி

யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலரவர்கள், சிதம்பரத்தில் தம் பெயர் விளங்க 'சைவப் பிரகாச வித்தியாசாலை' ஒன்று அமைத்துப் பல இளைஞர்க்குக் கல்வி கற்பிக்குமாறு விதித்திருந்தார். அதிற் சென்று கல்வி கற்பிக்கும் ஆசிரியராகச் சில ஆண்டுகள் தமிழ்ப்பணி புரிந்துறைந்தார் நாவலர். பின்னர்த் திருவாவடுதுறை யாதீனம் வந்து சேர்ந்தார். அக்காலத்துப் பதினாறாவது பட்டத்து மாபெருந்தம்பிரான் ஆக விளங்கிய திரு சுப்பிரமணிய தேசிக சுவாமிகள்பால் அருளுபதேசம் பெற்றார். அவர்கள் முன்னிலையில் ஆண்டு பன்னிரண்டு வரை அமர்ந்து ஞான நூல்களை ஐயந்திரிபற ஓதியுணர்ந்தார். இருமொழி இலக்கணம், இலக்கியம், தருக்கம், சித்தாந்தம், வேதாந்தம் இவற்றில் நாவலர்க்கு இணை யாவரும் இலர் என அவ்வாதீனத்தாராற் போற்றப்பட்டார். வித்துவமணியாய் ஆங்கு விளக்கமுற் றுறைந்தார். நாவலர் என்ற பட்டம் அக்காலை அவர்க்கு அளிக்கப்பட்டது.

## சிவஞான போதம் பெற்றது

மெய்கண்ட தேவ நாயனார் தமிழுலகம் உய்யும் பொருட்டுச் சிவஞான போதத்தைப் பன்னிரு சூத்திரத்துட் பாங்குபட வகுத்து வார்த்திகம் என்ற பொழிப்புரையும் செய்தருளியது புலவர் அனைவருக்கும் தெரிந்ததே. அந்நூற்குத் திருவாவடுதுறையாதீனத்துச் சிவஞான யோகிகள் சிற்றுரையும் பேருரையும் செய்தருளினர். திராவிட மாபாடியம் என்பது பேருரையின் பேர். அம் மாபாடியத்தினை அக்காலத்துச் சைவ சமயத்தில் அதிதீவிர பக்குவமுடையார்பாலே வாசிக்கக் கொடுப்பது அவ்வாதீனத்தார் மரபு. நாவலர் ஆங்குச் சேர்ந்த அண்மையிலேயே அந்நூலினை அவர்பாற் கொடுத்து வாசித்துவர ஆணையருளினர் ஆதீனத்துச் சுவாமிகள். ஆதீனத்து நன்மதிப்பும் ஆதரவும் நாவலர்

பெற்றிருந்தனர் என்பதற்கு இது தக்க சான்றும் அன்றோ ?

## நாட்டுப்பற்று, மொழிப்பற்று, சமயப்பற்று

நாட்டுப் பற்று, மொழிப் பற்று, சமயப் பற்று இம்மூன்றும் நாவலர் உள்ளத்தில் ஒருங்கு குடிகொண்டிருந்தன. அதனால் நம் தமிழ் நாடு முழுவதும் சென்று நாட்டுப் பெருமை, மொழிப்பெருமை, சமயப் பெருமை யாவர்க்கும் விளங்கச் சொற்பொழிவாற்றிப் புகழ்பெற்றார். நாட்டு முன்னேற்றங் கருதும் நல்லறிஞர்களும், மொழி வளர்ச்சியை முன்னும் தமிழ்ப் புலவர்களும், சமயம் வளர்க்கும் திருத்தொண்டர்களும் நாவலரைப் பாராட்டி நன்றிகூறி எங்கும் வரவேற்றனர். இராமநாதபுரம் மன்னர் ஆகிய பாஸ்கர சேதுபதி அவர்கள் சிதம்பரம் குடமுழுக்குக் காட்சி காணச் சென்றபோது நாவலரைக் கண்டு தம்மூர்க்கு வருக என உடனழைத்துச் சென்றனர். அரண்மனையிற் சிலநாள் அமர்த்திச் சைவசித்தாந்த சமயக் கொள்கைகளை ஆங்குள்ளோர் அனைவர்க்கும் விளங்கச் சொற்பொழிவு செய்ய வேண்டினர். அவ்வேண்டுகோளுக் கிணங்கி அவ்வாறே புரிந்து உடனுறைந்தனர்.

## சொற்பொழிவும் பொருளும் இடமும்

நாவலரவர்கள் சொற்பொழிவு நிகழ்த்த இடங்களும் பொருள்களும் பல. அவற்றுட் சில ஈங்குக் குறிப்பிடத் தக்கன. திருவுத்தரகோச மங்கை என்ற திருநகர்க்குச் சேதுபதியவர்கள் சென்றபோது உடன் சென்றனர் நாவலரும். இருவரும் இறைவன் வழிபாடியற்றி யமர்ந்திருந்தபோது சொற்பொழிவு கேட்க ஆங்குள்ள தொண்டர் விழைந்தனர். அவைத்தலைவராக மன்னர் அமர்ந்தனர், இறைவன் திருமுன்னர், "வேத நெறி தழைத்தோங்க" என்னும் பெரியபுராணச்



செய்யுள் முதற்குறிப்புப் பொருளாகக் கொண்டு விரிவுரையாற்றினர். அவ்வுரைப் பொருட்சுவையும் சொற்சுவையும் செவிமடுத்துக் களிப்புக் கடலின் மூழ்கி இன்ப வெள்ளத்தில் இறுமாந்தனர் எவரும்.

திருமுருகன் காட்சி கருதித் திருச்செந்தில் செல்லக் கருதினர் மன்னர் பெருமான் சேது வேந்தர். நாவலரையும் உடனழைத்தனர். செல்லும் வழியில் தூத்துக்குடி என்ற துறைமுகப் பேரூரில் தங்க நேர்ந்தது. ஆங்குள்ளோர் நாவலருரை கேட்க ஆவலுடையவராய் அரசரிடம் வேண்டினர். "அருந்துணையை யடியார் தம் அல்லறீர்க்கும் அருமருந்தை" என்ற தேவாரத் திருப்பாடற் பொருளைப் பொருளாகக் கொண்டு விரிவுரை நிகழ்த்தினர். அவ்வுரையில் "இவ்வுலக வாழ்வு மாயம் எனவும் சுற்றமும் துணையும் ஆகிய பற்று விட்டொழிக்கற் பாலது எனவும் மங்கையரோடு கூடும் ஐம்புலவின்பம் சிற்றின்பமென்றும் அதனை விடுத்து இறைவன் திருவடிப் பேறு ஆய பேரின்பப் பெருவாழ்வு பெறுவதுவே மக்கட் பிறப்பின் பயன்" என்றும் குறித்து விளக்கினர். அடியார் பலரும் அகங் குளிர்ந்து பரவசம் எய்தினர்.

திருச்செந்திலம்பதியில் சென்று தங்கிய காலை அங்குள்ளோர் வேண்டுகோட்கு இணங்கி, "மிக சைவத் துறை விளங்க" என்னும் பொருள் குறித்து மூன்றரை மணி நேரம் சமயத்துறைக் கருத்துகளை விளக்கித் தமிழ்ச் சொன்மாரி பொழிந்தனர். சைவப் பயிர் தழைத்து வளர்ந்து செழித்தது.

பின்பு ஓர் நாள் திருக்குற்றாலம் என்னும் திருப்பதி சென்று தங்கினர் காவலரும் நாவலரும். ஆங்கும் சொற்பொழிவு நிகழ்ந்தது. "கண்ணப்பனொப்பதோர் அன்பின்மை" என்னும் திருவாசகத்துள் ஒரு வாசகமே பொருளாகத் திகழ்ந்தது. இன்னும் பல்வேறிடங்களிற்

சொற்பொழிவு நிகழ்ந்தன. அவற்றை விரிக்கிற் பெருகும் என விடுத்தேன்.

**வரிசையும் பரிசிலும்**

நாட்டு நலங்கருதும் நல்லறிஞர், மொழிநலம் விழையும் முதுபுலவர், வீட்டின்பம் விரும்பும் மெய்த் தொண்டர் யாவரும் நாவலரை ஆவலுடன் கண்டு வரிசையுடன் அழைத்து வரவேற்றனர் எனில் அவர் பெருமையை எங்ஙனம் கூறஇயலும். சேதுபதி மன்னர் திருமுகங்களில் இவரைப் புகழ்ந்து பாராட்டியிருப்பது படித்து மகிழற்பாலது. "சைவசிகாமணியாயும பரசமய கோளரியாயும்விளங்காநிற்கும் கனம்நாவலரவர்களுக்கு" எனவும், "சைவப் பயிர்தழைக்கப் பிரசங்க இடிமுழக் குடனும் விபூதி ருத்திராட்சப் பொலிவாகும் மின்னலுட னும் ஓங்கிவளரும் ஒரு முகிலாகிய கனம், நாவலர் அவர் களுக்கு" எனவும், "தங்களை யாம் அழைத்துவந்த காரணம் தங்கள் பிரசங்க அமிர்தத்தினை நுகருமாறும், நம் சமஸ்தானத்திலுள்ள சகல பிரஜைகளும் சைவ சமய உண்மைகள் தேறுமாறும் திராவிட சைவ சித்தாந்த வித்யாபோதஞ் செய்து போதருங் கடப்பாட்டினைத் தாங்கள் மேவுதல் வேண்டுமென்பதே" எனவும் குறிப் பிட்டிருப்பது மன்னர் பெருமான் நாவலர்மீது வைத் திருந்த நன்மதிப்பையும் அன்பையும் எடுத்துக் காட்டு கின்றது.

சேதுமன்னர் நாவலரைத் தம்மூருக்கு அடுத்து அடுத்து அழைப்பதும் சொற்பொழிவு கேட்பதும் பரிசில் அளித்து விடுப்பதும் இயற்கையாக நிகழ்ந்தன. ஒரு நாள் அத்தாணி மண்டபத்தில் அனைவோருங் காண உயராசனத்தில் இருத்தி இன்மொழிகூறி மூவாயிரம் வெண்பொற்காசு பரிசில் அளித்தனர். அன்றியும், "வேண்டும் உதவி மேலும் செய்து போதருவோம்" என்றும் வாக்களித்தனர். தமிழ் அருமை யறிந்த தார் வேந்தர் சேதுபதியே அவ்வண்ணம் பாராட்டினர் எனில் இவர் புலமைக்கு அளவு கூற எவரால் இயலும். இரு மொழிப் புலமையும் இவர்பால் இயைந்திருந்ததே பாராட்டத்தக்க பண்பிற்குக் காரணம் ஆயிற்று.



பாஸ்கர சேதுபதி மன்னர்பாற் பரிசும் வரிசையும் பெற்ற புலவருட் பெரும் பரிசும் உயர் வரிசையும் பெற்ற வர் நாவலர் ஒருவரே. சிவசம்புப் புலவர் என்பவரும் இவர்போற் பரிசும் வரிசையும் பெற்றவர் எனத் தமிழ்ப் புலவர் சரித்திரத்தால் அறிகிறோம். அதில் "யாழ்ப் பாணத்துப் புலவர்களுட் சபாபதி நாவலர், சிவசம்புப் புலவர் என்னும் இருவரும் பெருந்தொகைப் பரிசில் பெற்றதை மறந்தவர் யாவர்?" என்ற சொற்றொடர் அமைந்திருப்பதும் இதனை வலியுறுத்தும். (தமிழ்ப் புலவர் சரித்திரம் பக்கம் கஅ.)

**ஞானாமிர்தச் செய்தித்தாள்**

சேதுபதி மன்னர்பாற்பெற்ற பரிசுடன் சென்னை வந்தனர் நாவலர். சைவசித்தாந்தத்தை வளர்க்கத் தம் சிந்தையிற் கருதினர். அதன் பொருட்டுச் "சித்தாந்த வித்தியாநுபாலன யந்திரசாலை" என்ற பெயரிட்டு ஓர் அச்சகம் நிறுவினர். "ஞானாமிர்தம்" என்னும் பெயர் பெற்ற செந்தமிழ்ச் செய்தி பரப்பும் திங்கள்தாள் ஒன்று நடத்தினர். தென்னாட்டுப் புலவர் அனைவரும் அச் செய்தித்தாளை வியந்து கொண்டாடி வாங்கிப் படித்து இன்புற்றனர். அவ்வமயம் "பிரமவித்தியா" என்னும் பேர்பெற்ற செய்தித்தாள் எங்கும் உலவியது. அச் செய்தித்தாள் நடத்தும் தலைவர் ஞானாமிர்தம் என்னும் செய்தித்தாளை அடியில் வருமாறு புகழ்ந்து தம் செய்தித் தாளில் வெளியிட்டனர். "ஞானாமிர்தம் என்னுமோர் அமிர்தம், புத்தி என்னும் மந்தரத்தாற் கடைய ஓர் நாவலர் என்னும் திருப்பாற் கடலிற் பிறந்து உலவு கின்றது" என்பது அது. இவ்வாறு பலரும் புகழ்ந்து பாராட்ட ஞானாமிர்தம் சில காலம் நடந்தது.

## திருமயிலை வாழ்வு

நாவலர் இரண்டாண்டு திருமயிலை என்னும் திரு நகரில் வதிந்தனர். ஆங்குள்ள அறிஞர் பலரும் சொற் பொழிவாற்ற வேண்டினர். அவ்வேண்டுகோட்கிணங்கிப் பன்னூல் விரிவுரையாற்றினர். கபாலீச்சுவரர் திருமுன்பு மண்டபத்திலும் திருவள்ளுவ நாயனார் திருக்கோயிலி லும் நடைபெற்றன. திருவிழா நாளில் ஓர் நாள் "கற்றுக் கொள்வன வாயுள" என்னும் திருமுறைச் செய்யுட் பொருளை விரித்துரைத்தனர். மற்றும் ஓர் அமயம் "தலைப் பட்டார் தீரத்துறந்தார்" என்ற திருக்குறட் பொருளே பொருளாகக் கொண்டு துறவு நிலையை விளக்கிச் சொற் பெருக்காற்றினர். பின்னும் ஓர் நாள் "மறை முடிவிற் பயில் கருத்தும்" என்ற சிவதத்துவ விவேகச் செய்யுள் முற்குறிப்பே பொருளாகக் கொண்டு சைவ சித்தாந்தக் கொள்கையின் தனிச்சிறப்பு விளக்கினர். சிறந்த விரி வுரையை மட்டும் ஈங்குக் கூறினேன். எல்லாம் கூறின் மிக விரியும்.

## இயற்றிய நூல்கள்

சிதம்பர சபாநாதர் புராணம், ஏகமதசங்கற்ப நிரா கரணம், சிவகர்ணாமிர்தம், பாரத தாற்பரிய சங்கிரகம், இராமாயண தாற்பரிய சங்கிரகம், சதுர்வேத தாற்பரிய சங்கிரகம், வைதிக காவிய தூஷணமறுப்பு என்பன வடமொழி நூல் ஆய்ந்து அவற்றின் பொருளைத் தமிழ்ச் சொற்களில் விளக்கிச் செய்யப்பட்ட மொழிபெயர்ப்பு நூல்கள் இவை. திருச்சிற்றம்பல யமக வந்தாதி, திருவிடைமருதூர்ப் பதிற்றுப்பத் தந்தாதி, இலக்கண விளக்கப் பதிப்புரை மறுப்பு, மாவையந்தாதி, நல்லைச் சுப்பிரமணியக்கடவுள் பதிகம் என்பன தமிழ்மொழிச் செய்யுளாலும், உரைநடையாலும் இயற்றப்பட்ட நூல்கள். வடமொழி தென்மொழிப் புலமையுடையார் ஆதலின் இவ்விருவகை நூல்களும் இயற்றிப் புகழ் எய்தினர். திராவிடப் பிரகாசிகை என்ற இந்நூலினும் வடமொழி இலக்கண நூல், இலக்கிய நூல்களின் கருத்துகள் விரவியிருப்பதைப் பல இடங்களிற் காண லாம். வடமொழிச் சுலோகங்களை எடுத்துக் காட்டியிருப் பதும் இதனை நன்கு விளக்கும்.



## பண்பும் செயலும்

நாவலர் நல்லொழுக்க நெறிநின்று சைவசமயத் தையும் தாய்மொழியையும் வளர்க்கப் பாடுபட்டனர். திருக்கோயில் வழிபாட்டில் தலைநின்றனர். திருவுத்தர கோசமங்கை, திருச்செந்தில், திருக்குற்றாலம், திருப் பூவணம், திருவாலவாய் முதலிய தலங்கள் சென்று இறைவன் வழிபாடியற்றி வந்தனர். "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற முதுமொழியைக் கடைப்பிடித்து நூல்கள் இயற்றியும், சொற்பொழிவு ஆற்றியும் தம் கருத்தினை உலகத்தார்க்கு விளக்கினர். அன்பும் பண்பும் அமைந்த அறிஞராய் இப்புவியில் வாழ்ந்தனர். இவர் பண்பும் செயலும் அறிந்து தமிழுலகம் பாராட்டும் என்பது ஒருதலை.

## மறைவு

1903 ஆம் ஆண்டு தம் ருஅ ஆம் அகவை நிறை வெய்திய ஞான்று சிதம்பரம் சென்று கூத்தப் பெரு மான் குஞ்சிதபாதம் வணங்கி அமர்ந்திருந்தார். வாழ் நாள் முடியும் அறிகுறி தோன்றிற்று அவர்க்கு. ஆசிரியர் சிவப்பிரகாசபண்டிதர், ச. பொன்னம்பலப்பிள்ளை, சுவாமி நாதபண்டிதர் முதலியோரைத் தம் அருகில் வரவழைத் துப் "பவனமாய்ச் சோடையாய்" என்ற தேவாரத் திருப் பாடற் பொருளுரைத்து இன்புறச் செய்து தானும் இன் புற்று அமர்ந்து இறைவன் திருவடி நீழல் எய்தினர்.

---

## எடுத்தாளப்பட்ட நூல்கள்

அகத்தியம்
அப்பர் தேவாரம்
அரதத்த சிவாசாரியார் சுலோக பஞ்சக மொழிபெயர்ப்பு
அற்புதத்திருவந்தாதி
ஆத்திசூடி
ஆத்திரையன் பேராசிரியன் பொதுப்பாயிரம்
ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக்கோவை
இலக்கணக்கொத்து உரைப்பாயிரம்
இலக்கணவிளக்கச் சூறாவளி
இறையனார் அகப்பொருள்
உண்மை விளக்கம்
கந்த புராணம்
கம்பராமாயணம்
கலித்தொகை
கல்லாடம்
காஞ்சிப் புராணம்
குதர்க்காரணிய நாச மகா பரசு கண்டனம்
குறுந்தொகை
கோயிற்புராணம்
கோயிற் திருப்பண்ணியர் விருத்தம்
கோயில் நான்மணிமாலை
சங்கற்ப நிராகரணம்
சம்பந்தர் தேவாரம்
சித்தியார் சுபக்கம்
சிலப்பதிகாரம்
சிவஞான போதம்
சிவதருமோத்தரம்
சிவபோகசாரம்
சிவப்பிரகாசம்
சீவகசிந்தாமணி
சுந்தரர் தேவாரம்
சூடாமணி நிகண்டு
சேந்தனார் திருவிசைப்பா
சோமேசர் முதுமொழி வெண்பா
தணிகைப்புராணம்
தனிப்பாடல்
தாயுமானவர்
திருக்களிற்றுப் படியார்
திருக்குறள்
திருக்கோவையார்
திருத்தொண்டர் திருவந்தாதி
திருநாமக் கோவை
திருப்பல்லாண்டு
திருப்புகழ்ச் சிறப்பு வெண்பா
திருமந்திரம்
திருமுகப் பாசுரம்



திருவருட் பயன்
திருவள்ளுவமாலை
திருவாசகம்
திருவுந்தியார்
தேவாரம் நுதலியபொருள் தெரிக்கும் பழைய வெண்பா
தொல்காப்பியம்-எழுத்து
தொல்காப்பியம்-சொல்
தொல்காப்பியப் பாயிரவிருத்தி
தொல்காப்பியம்-பொருள்
தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தி
நம்மாழ்வார்
நல்வழி
நன்னூல் - பெயரியல்
நன்னூல் விருத்தி
நாலடியார்
நீதிநெறி விளக்கம்
பட்டினத்தார் பாடல்
பதி பசு பாச விளக்கம்
பத்துப்பாட்டு
பழமொழி
பழம்பாடல்
புறநானூறு
புறப்பொருள் வெண்பா மாலை
பெரிய புராணம்
மணிமேகலை
மதுரைக்காஞ்சி
வாக்குண்டாம்
வாயுசங்கிதை
வீரசோழியம்

---

## உள்ளுறை



---

உ

திருச்சிற்றம்பலம்

# திராவிடப் பிரகாசிகை

என்னும்

# தமிழ் வரலாறு

---

### தற்சிறப்புப் பாயிரம்

மன்னு மாமுதற் கடவுளை மனத்திடை நிறுவி
என்னை யோர்பொரு ளாக்கொண்டாள் குரவனை இறைஞ்சி
இன்ன மாண்திரா விடப்பிர காசிகை யென்னுந்
தன்னை நேர்தருந் தமிழ்வர லாறுசாற் றுவனல்.

### பாயிரம்

மாயிரு ஞாலத்து மன்னுயிர்த் தொகுதியுள்
ஊறுஞ் சுவையும் நாற்றமும் ஒளியும்
ஓசையும் என்னப் பேசுமைம் புலத்தொடு
நல்லதன் நலனுந் தீயதன் தீதும்
பகுத்துணர் காட்சி அகத்துணர் வுளப்பட
ஆறறி வும்உடை வீறுசால் சிறப்பின்
மக்களுயிர்த் தொகுதி மனவிரு ளிரீஇ
மிக்கபே ரறிவு விளக்க மேவிய
வினையின் நீங்கி விளங்கிய வறிவின்

முனைவனன் றருளிய எனைவகை மொழியுளும்
அறம்பொரு ளின்பம் வீடெனு நான்குந்
திறம்பா மரபின் தெளியவறி வுறுத்தலிற்
கடவுண்மா மொழியெனப் புடவிநன் றேத்தச்
சீரியல் வரம்புடை ஆரிய மொழியும்
அமிழ்தியல் வரம்புடைத் தமிழ்வள மொழியும்
திகருறீஇச் சிறந்து நிலவுவ வாலவை
கலிகெழு திரைவிரீஇக் கலன்பல மாய்க்கும்
வலிகெழு மூவரி வளைஇய மாட்சிக்
குறுகுநர் மனங்கண் புய்க்கல் கூடார்
இறும்பூ துறநனி பொன்மயம் இயற்றுந்
தேவலஞ் சான்ற நாவலம் பொழிலகத்
தொன்பான் வருடத் தோங்குபா ரதமெனுங்
கரும பூமி மருவுகண் டங்களுள்
ஆத்த னருள்வே தாகம வழக்குஞ்
சாதி வரம்புந் தீர்த்தமுந் தலனும்
மேதகத் தழுவி விளங்குந் தெய்வக்
குமரிக் கண்டங் குலவுறீஇ மற்றதன்
வடாதுந் தெனாதும் மரபுளி மன்னூஉப்
பயிலு மாலைய பன்னு மிரண்டுள்
தமிழ் வரலாறு தகைபெற வெடுத்தீண்
டமைவுறக் கூறுதற் கமர்ந்தது தன்னைத்
தமிழின் தெய்வப் பழமை மரபே
புலக்கணம் அமலும் இலக்கண மரபே
கலைக்குவை சிவணும் இலக்கிய மரபே
ஏத்தருஞ் சிறப்பிற் சாத்திர மரபென
நால்வகைப் படுத்து மேலவற் றொழிபும்
வரன்முறை நிறுவி அரில்தப வகுப்பாம்
புரைதபு தமிழ்முறை திகழ்தரற் பொருட்டே.



தமிழின் தொன்மை மரபினையும், அதனிலக்கண மரபினையும், இலக்கிய மரபினையும், சாத்திர மரபினையும், நல்லாசிரியர் வழிநின்று தெளிதரற் குரிய நற்றவ அறிவு மாட்சியுடையரல்லாதார் சிலர் இக்காலத்துத் தாந்தாம் அறிந்தவாற்றால், முறை பிறழக்கொண்டு தமிழ் மொழியினும் பிறமொழியினும் பலவாறெழுதி வெளியிட்டு வரம்பழித்தலானும், அவர் உரையின் பொய்ம்மை தேறமாட்டாத பேதை நீரார், அவற்றினை மெய்யெனக்கொண்டு தமிழ் நல்லாசிரியர் தெய்வப் புலமை மாட்சியினையும், அவர் நூலுரைகளின் தாரதம்மிய முறையினையும் வரன்முறை போற்றாது புறம்பழித்துத் தமக்கும் பிறர்க்குங் கேடு சூழ்தலானும், தமிழ் உலகம் மற்றவற்றின் உண்மை தேறி உறுதிப் பயனெய்துதற்பொருட்டு அத் திறனெல்லாம் விளக்கித், திராவிடப் பிரகாசிகை, யென்னும் பெயரினால் இவ்வசனகிரந்தம் (இவ்வுரை நடை நூல்) இயற்றுவே மாயினேம்.

இனித் தமிழ் நூலுரைகளின் கால முறையெல்லாம் இதன்கண் முற்றவெடுத்து முடியக்கூற ஒருப்பட்டிலம். என்னை ? தமிழ் நூலுரைகள் பிறந்த கால எல்லைகளை அந் நூலுரை ஆசிரியன்மாருள் சிலரன்றிப் பலர் அவ்வவற்றுள் தெரியக் கூறாதொழிதலானென்க. ஆற்றாயினும், பின்னை நூலுரையாசிரியர்கள் முன்னை நூலுரைச் சொற்பொருள்களைத் தத்தம் நூலுரைகளுள் வழிமொழிந்து கொண்டுரைக்குமாறு பற்றி, இவை முற்றோன்றி நடக்கு நூலுரைகள், இவை பிற்றோன்றி நடக்கு நூலுரைகளென்பது இனிதறியப் படுதலின், நூலுரைகட்கு முற்பிற்பாடு அவ்வாற்றாற் கொண்டு, அம்முறை நிறுத்தி, நிலைபெறு நூலுரைகளுள்ளுந் தமிழ்ப்புலமைக்குஞ் சாத்திரப்புலமைக்கும் இன்றியமையாதனவாய்ச் சிறக்கும் நூலுரைகளின் விடயப் பகுதிப்பெற்றி மாத்திரையே இதன்கண் நன்கு விளக்கிக் கூறலுற்றாம்.

போலி இலக்கண இலக்கிய சாத்திர நூலுரை வரலாறு இதன்கட் கூறுதற்கு இசைந்திலமாயினும், தொன்று தொட்டுவருந் தமிழ் நல்லாசிரியர்வழித் தமிழ்க்கல்வி கற்கப்

பெருந் தமிழ் மாணுக்கர்களும் பிறரும், இவை மெய்யிலக்கண இலக்கிய சாத்திர நூலுரைகள், இவை போலி இலக்கண இலக்கிய சாத்திர நூலுரைகளென்று தெளியமாட்டாராய் மெய்யும் பொய்யும் மயங்கக்கொண்டு அவம்படுவ ராகலின் அவர் அவம்படாமல் மற்றவற்றுள் மெய்ந் நூலுரைபோலத் தோற்றி மயக்குஞ் சிலவற்றின் பொய்ப்பெற்றியினையும் ஆண்டாண்டு இயைபுபற்றி இதன்கண் எடுத்துக் கூறி ஒழித்தல் செய்வேமாயினேம். இனித் தமிழ் இலக்கண இலக்கிய சாத்திரப் புலமை நிரப்புமாறும், அப் புலமைகளால் இகபர வீட்டின்ப உறுதிப்பயன்களை முயன்று சாதித்தடையுமாறும், ஓரொழிபாகக்கொண்டு இதன் இறுதிக்கண் தந்துரைத்தாம். இவ்வாற்றானே, இந்நூல் தமிழின் தெய்வப்பழமை மரபியல் இலக்கணமரபியல், இலக்கியமரபியல், சாத்திரமரபியல், ஒழிபியலென ஐவகைப்பட்டதென்பது. அற்றேல் அஃதாக; இலக்கியத் தன்மையே இலக்கணமாகலின், இலக்கிய மரபியல் இலக்கணமரபியலின் முன்வைத்து ஓதற்பாற்றெனின், அஃதொக்குமன்னுயினும், தமிழ்நிலத்து அகத்திய மொன்றே முற்காலத்துத் தோன்றி மும்மைச் செந்தமிழ் இலக்கண முதனூலாயிற்று; அதுபற்றியே முச்சங்கத்துச் சான்றோரும் பிறரும் முத்தமிழ் இலக்கிய இலக்கணங்கள் செய்திட்டார்; அதனானே, இலக்கண மரபியல் ஈண்டு முன்வைத் தவ்வாறு ஓதுவேம் ஆயிற்றென்க.

---

# க. தமிழின் தெய்வப்பழமை மரபியல்

## 1. பாடையியல்பு

மலர்தலை உலகத்துச் செவிப்புலனும் ஓசை எழுத்தோசையெனவும், இசையோசை யெனவும் இருவகைப்படும். இவற்றுள், எழுத்தோசை விந்து முதற்காரணமாக அதனின்றும் விருத்தியாய்த் தோன்றிச் செவிப்புலனுவது இசையோசை ஆகாயம் முதற்காரணமாக அதன்கண் தோன்றிச் செவிப்புலனவது. வடநூலார் எழுத்தோசையை வர்ணாத்மகசத்தம் என்றும், இசையோசையைத் தொனியாத்மக சத்தம் என்றுங் கூறுப. சத்த தன்மாத்திரையின் காரியமாகிய ஆகாயமே சத்தத்திற்கெல்லாங் காரணமாகலின், எழுத்தோசைக்கு வேறு காரணம் ஆமா றென்னையெனின் — அற்றன்று; ஆகாயம் எழுத்தோசையைப் புலப்படுத்துவதாகிய இசையோசைக்குக் காரணமாவதன்றி அதனாற் புலப்படுவதாகிய எழுத்தோசைக்குக் காரணமாகாதென்க. ஒளியும் உருவமும் போலப் புலப்படுப்பதும் புலப்படுவதுமாகிய இசையோசைக்கும் எழுத்தோசைக்குந் தம்முள் வேற்றுமை அனுபவத்தின் வெளிப்படத் தோன்றுதலானும், கடலோசை முதலாயின எழுத்தோசையின் வேறுதல் எல்லார்க்கும் ஒப்ப முடிந்ததாகலானும், அவ்விரண்டன் காரணமும் வேறென்பது துணியப்படுமென்க. இன்னும், அங்காப்பு முதலிய அகமுயற்சியாற் புலப்படுவது எழுத்தோசை எனவும், அதனைப் புலப்படுப்பதாய் எடுத்தல்படுத்தல்முதலிய புறமுயற்சியாற் பிறப்பது இசையோசை எனவும் தம்முள் வேறுபாடு தெரிந்துணர்ந்து கொள்க.

இன்னும், இவ்வயிந்தவவோசை பவுதிகவோசைகளின் இலக்கண வேறுபாடுகளும், எழுத்தோசைக்குக் காரணமான விந்து என்னுஞ் சுத்தமாயையினது உண்மைக்குப்பிரமாணமும், ஆசிரியர் சிவஞானயோகிகள் சிவஞானமாபாடியத்துப் பிரமாணவியல் இரண்டாம்பாதத்து இரண்

டாம் அதிகரணத்துத் தடைவிடைகளான் விளங்கக்கூறியருளுதலின், ஆண்டுக் காண்க. உந்தியிற் சூக்குமமாய் எழுந்த நாதம் நெஞ்சின்கண் பைசந்தியாய்க் கண்டத்தின்கண் மத்திமையாய்ப் பின்னர்த் தன் செவிக்குக் கேட்குஞ் சூக்குமவைகரியும் பிறர் செவிக்குக் கேட்குந் தூலவைகரியுமாய்ப் பல்வேறு எழுத்துக்களாம். இவ்வெழுத்துக்கள் வடமொழி தென்மொழி முதலிய பாடைச் சொல்வடிவாய்ச் சவிகற்ப உணர்ச்சி நிகழ்தற்கு ஏதுவாம்.

இனி, ஆசிரியர்கள் சொல்லிலக்கணம் பலவாறு கூறுப. சத்த நூலார் 'குடம் அறியாதானுக்கு இது குடமென்றால் இதுவென்னுஞ் சுட்டுப்பெயருங் குடமென்னும் பொருளும் பேதமின்றி அபேதமாய்த் தோன்றுதலின், 'சொல் நித்தியம்' என்றும், 'விபு' என்றும், 'திரவியம்' என்றுங் கூறுவர். சேனாவரையர் [1]"மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா" என்னும் உரியியற் சூத்திரத்து அவர் மதமே பற்றிப் "பொருளொடு சொற்கியைபு இயற்கை யாகலான் அவ்வியற்கையாகிய இயைபாற் சொற்பொருளுணர்த்துமென்ப" என்றுரைத்து, "ஒரு சாரார் பிறகாரணத்தானுமுணர்த்துமென்ப" எனப் பிறர் மதங் கூறி ஒழிவர். உரையாசிரியரும், நச்சினார்க்கினியரும் [2]"உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே" என்னுஞ் சூத்திரத்து முறையே 'சொல் எழுத்தினான் ஆக்கப்பட்டுத் திணையறிவுறுக்குமோசை" என்றும், 'ஒருவன் பொருட்டன்மையை யறிதற்குச் சொற் கருவியாய் நிற்கும்" என்றும், அவரோடு மாறுபட்டுரைப்பர். இனிச் [3]"சொல்லும் பொருளும் பேதாபேதமாம்" எனக் கொண்டார் சூத்திர்விருத்திகாரர்.

சத்தப்பிரவஞ்சம், அர்த்தப் பிரவஞ்சமெனக் காரியம் இருவகைப்படும். இவைஇரண்டுந் தம்முள் வேறுபாடுடைய

1. தொல் - சொல் - உரியியல் சூத் - கஅ.
2. தொல் - சொல் - கிளவியாக்கம் - சூத் - க.
3. தொல்காப்பியம் முதற் சூத்திரவிருத்தி - பக்கம் 21.



வாயினும், சுத்தமென்னுஞ் சாதியான் வேறுபாடின்மையானும், சத்தப் பிரவஞ்சம் அர்த்தப் பிரவஞ்சத்தைப் பற்றியன்றி நில்லாமையானும், சுத்தமாயை ஒன்றுதானே சத்த ரூபமும் அர்த்த ரூபமுமாகிய இரண்டு தன்மையு முடைத்தாய் அவ்விரண்டற்கும் முதற் காரணமாமெனக் கொள்ளப்படும். இனிச் சொற்பொருள் உணர்த்துதற்கு அனுகூலமாகும் ஞாபகசத்திகளும்பொருள் காரியப்படுதற்கு உபகாரமாகுங்காரகசத்திகளும்அவ்விரண்டன்கண்ணுந் தாதான்மியத்தால் உளவாதல் அருத்தாபத்தி அளவையாற் கொள்ளப்படும், அற்றேல், எழுத்தானியன்ற பதங்களாதல், பதங்களானியன்று அவாய்நிலை தகுதி அண்மைகளான் எழுவாய் பயனிலை முதலியவாய்த் தொடர்ந்துநிற்கும் வாக்கியங்களாதல்அவ்வப்பொருள்களை அறிவுறுக்குமெனவே கோடும்; அவ்வாறன்றி எழுத்தின் வேறாய்ப் பொருள்களை அறிவுறுக்குஞ் சத்திகளுண்டென்பதற்குப் பிரமாண மில்லையாலோவெனின்,—அற்றன்று; 'கால்' என்புழிக் ககர ஆகார லகர வெழுத்துக்களையன்றி அவற்றின் வேறாய்ப் பதமென்பதொன்றின்மையானும், அவ்வாறே 'கால் கிடந்தது' என்புழி அப்பதங்களின் வேறாய் வாக்கிய மொன்றின்மையானும், எழுத்தின் வேறாய்ப் பதவாக்கியங்கள் பொருளுணர்த்துவன அல்லவென்பது பெறப்படும். படவே, நையாயிகர் மதம்பற்றிக் ககர ஆகார லகரவெழுத்துக்களே அப்பொருளுணர்த்துமெனக்கோடல் வேண்டும். அங்ஙனங் கொள்வுழி, அவை ஒருங்குகூடிப் பொருளுணர்த்துமோ? ஓரோவொன்றே பொருளுணர்த்துமோ? எனக் கடாயினார்க்கு, ஓசை உணர்வு தொழில் மூன்றும் முக்கணப்பொழுதே நிலைபெறுமென்பது நையாயிகர் முதலியோர்க்கு உடம்பாடாகலின், முறையிற்பிறந்துநின்றுகெடு மெழுத்துக்கள் ஒருங்கு கூடி நின்று பொருளுணர்த்துமென்பது கூடாமையின், ஓரோவொன்றே பொருளுணர்த்தும் எனல்வேண்டும். 'க' என்ற மாத்திரையானே 'கம்பலம்' என்னும் பொருளுணர்த்தாமையானும், உணர்த்துமெனினுங் ககரம்ஒழிந்த எழுத்துக்களை உச்சரித்தல் பயனில

வாய் முடியுமாகலானும், ஒன்றென்றே பொருளுணர்த்து மென்பது பொருந்தாமையின், எழுத்துப் பதவாக்கியங் களின் வேறாய்ப் பொருளறிவுறுப்பனவாகிய ஞாபகசத்திக ளுண்டென்பது கண்டுகொள்க. சத்தியெனினும் போட மெனினும் ஆற்றலெனினும் பொருந்தும்.

இவ்வாற்றாற் சொல்லாற் புலப்பட்டுப் பொருளறிவுறுக் கும் ஞாபகசத்திகள் சொற்றொறும் வெவ்வே றுண்டெனவே கோடும். ஆயினும், 'ஆ' 'ஆண்டு' என்றாற்போல்வன ஒன்றாய் நின்று வெவ்வேறு பொருளுணர்த்தக் காண்டலின், ஒரு சொற்சத்தியானே ஒரு பொருளன்றிப் பலபொருள் உணரப்படுதலும் உண்டாங்கொலெனின்,—அற்றன்று; ஆ ஆண்டு என்றாற்போல்வன வெவ்வேறு பொருளுணர்த்து தலின், ஒரு சொல்லெனப்படா, வெவ்வேறு சொற்களேயாம் என்க. இனி வெவ்வேறு சொற்களாயினும், எழுத்தொப் புமையானே பலபொரு ளொருசொல் லென்று அங்ஙனம் வழங்கப்பட்டனவென்பது. இன்னும், ஆவென்பது பெற்றத்திணையும் மரவிசேடத்திணையும் உணர்த்தும்வழிப் பெயர்ச்சொல் லெனவும், இரக்கக்குறிப்பினை உணர்த்தும் வழி இடைச்சொல்லெனவும், ஆதற்புடை பெயர்ச்சியை உணர்த்தும் வழி உரிச்சொல்லெனவுங்கொள்ளப்படுதலின், எழுத்தொப்புமைபற்றியே உபசாரத்தான் அவ்வாறு வழங் கப்பட்டன என்பது தெற்றென வுணர்க. இன்னும், இரு ஞாபகசத்தியது உண்மையைச் சிவஞானமாபாடியகாரர் சிவ ஞானமாபாடியத்துப் பிரமாண ஓத்தின் இரண்டாம் பாதத்து நான்காம் அதிகரணத்திற் கடாவிடைகளான் மிக விரித்துரைத்தார். பொருடொறும் அவ்வக்காரிய நிகழ்ச்சிக் கனுகூலமாகுங் காரகசத்திகள் உண்மைக்குப்பிரமாணமும் ஆண்டே மிக விரித்துரைத்தார். அவ்வாறெல்லாம் ஈண்டுக் கூறிடப் புகின் வாக்கியம் மிக விரியுமென்பது.

இனிச் சேனாவரையருங் "[1]கால மூலக" மென்னுஞ் சூத்திரத்து, "உலகமென்பது இடத்தையும் ஆகுபெயரான்

1. தொல் - சொல் கிளவியாக்கம் - சூத்.௫௮.



இடத்து நிகழ்பொருளாகிய மக்கட்டொகுதியையும் உணர்த்துமாகலான், இருதிணைக்கண்ணுஞ் சென்றதன்றோ வெனின்,—அற்றன்று; வடநூலுள் உலகமென்பது இரு பொருட்குமுரித்தாக ஓதப்பட்டமையின், மக்கட்டொகு தியை யுணர்த்தும் வழியும் உரிய பெயரேயாகலின், ஆகு பெயரன்று; அதனால் ஒருசொல் லிருபொருட்கண்ணுஞ் சென்றதெனப்படாது; இருபொருட்கும் உரிமையான் இரண்டு சொல்லெனவே படுமென்பது. வேறுபொரு ளுணர்த்துதலின் 'வேறு சொல்லாதலே துணிவாயினும், பல பொருளொரு சொல்லென்புழி எழுத்தொப்புமைபற்றி ஒரு சொல்லென்றார்'' என்றிவ்வியல்பு தொகுத்துணர்த் தியதுகாண்க.

இனி எழுத்துச் சொல் வடிவான பாடை பேசுதற்குரி யார் முப்பத்திரண்டு அவயவத்தான் அளவிற்பட்டு அறி வோடு புணர்ந்த ஆடூஉ மகடூஉ என்னும் பகுப்புடைய மக்களென்ப. "[1]மக்க டாமே யாறறி வுயிரே - பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே" என்றார் ஆசிரியர் தொல் காப்பியனாரும். தேவருந் தானவரு முதலாயினார் மக்கட் கிளையென ஆண்டடங்குவ ரென்க. தேவர் தானவர் மக்களினுயர்ந்தோ ராயினுங், காணப்படும் உலக வழக்குக்கூறுகின்றாராகலின், ஆண்டு மக்களைச் சிறந்தெடுத் தோதிக் காணப்படாத தேவர் தானவர் முதலாயினாரைக் கிளையென அவ்வாறு அடக்குவாராயிற்றென்றுணர்க.

இனி நன்னூலாரும் இலக்கண விளக்கநூலாரும் "[2]பேய்பூத மந்தி கிளிபூவை பேசுதலான் - ஆகுமே தன்மை பொது'' என்பதே பற்றி ஆசிரியர் தொல்காப் பியனார் ஆணை கடந்து தன்மையை விரவுத் திணையெனச் சாதித்தாராலெனின்,—"பேய் பூதம் தெய்வச்சாதியாதலால் "[3]தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவி" என்பதனு

1. தொல் - பொருள் - மரபியல் - சூத்.௩௪
2. இலக்கண விளக்கச் - சூறாவளி - 29
3. தொல் - கிளவி - சூத். - 4.

ளடங்கு மாகலானும், மந்தி பேசுதல் யாண்டு மின்மையின்; "ஈங்கு நீ யெம்மைநோக்கி" என்றாற்போல்வன புனைந்துரை வகையாற் கூறியதன்றி உண்மைபற்றிக் கூறியதன்றாகலானும், கிளி பூவை கூறியவாறு கூறுதல் அல்லது இச்சொல்லை இவ்வாறு கூறவேண்டுமெனச் சொல்லுண்மை அறிந்து கூறுதல் உலகத்தின்மையால், "பூவையுங் கிளியுங் கேட்டு" என்றாற் போல்வனவும் புனைந்துரைவகையாற் கூறியதே ஆமாகலானும், தன்மை விரவுத்திணை ஆகாதென மறுக்க. மரமுதலியன பேசுவனவாகச் சான்றோர் செய்யுட்கண் வருதலின், அவை புனைந்துரை யெனவே படுமாகலான், இவையும் அன்னவே யாமென்க. இனி மந்தி முதலிய உண்மையாற் பேசினவே யாமெனினும், "எறும்புகள் பேசினவற்றை ஒருவேந்தன் கேட்டு நகைத்துத் தன் மனைவிக்குக் கூறித் தலையிழந்தான்" எனப் புராணங்கள் கூறுதலின், எறும்புகள் பேசுதல் பெற்றாம்; அவை பேசுதல் குறிப்பால் உணர்த்துதலன்றி மொழியாற் பேசுதலன்றென்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது: முடியவே, அஃறிணைப் பெயர்களெல்லாம் இவ்வாறு ஒன்றற் கொன்று குறிப்பான் உணர்த்துமென்பது பெறப்பட்டதாகலின், மந்தி முதலிய பேசுதலும் அவ்வியல் பிற்றே யாமென்க. இங்ஙன மன்றாயின், உயர்திணை யஃறிணையென்னும் பகுப்பேலாமை யறிக.

ஓரோவழி அஃறிணைப் பொருள்கள் மொழியாற் பேசுவன உளவாயின், அது தெய்வத்தன்மை முதலிய விசேடத்தா னன்றிப் பொருட்டன்மையான் அன்மையின் அமைத்துக்கொள்வதன்றிஅதுபற்றிவிரவுத்திணையென்றல் சிறிதும் பொருந்தாதென்க. அற்றாகலி னன்றே ஆசிரியர் தன்மையை உயர்திணை யெனவே கூறியதூஉமென்க. இது கொள்ளாதார்க்குச் "சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச்— செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும்" என்பதனைத் தழுவுதலும், "கேட்குந போலவுங் கிளக்குந போலவு - மஃறிணை மருங்கினு மறையப் படுமே" யென வழுவமைத்தலும் வேண்டாவென்க' என்று இலக்கண விளக்கச்சூறாவளி



யுள் ஆசிரியர் சிவஞானயோகிகள் அது பொருந்தாமை காட்டி மறுத்தா ரென்க.

## 2. தமிழின் தெய்வமாட்சி

ஆரிய மொழியும் தமிழ்மொழியும் ஆதிக்கட் பரமசிவனால் தோற்றுவிக்கப்பட்டு நடைபெறுந் தெய்வமொழிகளாம். ஆரியம் பரமசிவனால் தோற்றுவிக்கப்பட்டு நடக்குந்தெய்வமொழியென்பது வேதாகமம் முதலிய உரையளவைகளானே இனிது பெறுதும்; தமிழ் அன்னதோர் மாட்சி யுடைத்தென்பது எவற்றாற் பெறுதுமெனின்,—"[1]தம் மலர் அடியொன் றடியவர் பரவத் தமிழ்ச்சொலும் வடசொலுந் தாள்நிழற் சேர- அம்மலர்க் கொன்றை யணிந்தவெம் அடிகள் அச்சிறு பாக்கம தாட்சிகொண் டாரே" என்னுந் தமிழ் வேதத்தானும், "[2]மாரியுங் கோடையும் வான்பனி தூங்கநின் றேரியு நின்றங் கிளைக்கின்ற காலத்தே - ஆரிய முந்தமி ழுமுட னல்கிக் - காரிகை யார்க்குங் கருணைசெய் தானே" என்னுந் திருமந்திரத் திருமுறையானும் பெறுதுமென்பது. இன்னும் தென்மொழி இலக்கணம் "[3]குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகர்" எனக் காந்தத்துக் காளிகா காண்டத்துக் காஞ்சிப்புராணத்தும், "திராவிடமெனப் பெயரிய மாபாடைக் கிலக்கணம் சிவபிரான் அகத்தியனுக்கு அருளிச்செய்தான்" எனக் காந்தத்துஉபதேசகாண்டத்தும், "திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளுங் குன்றமெறிந்த குமரவேளும் அகத்தியனாரோடு தலைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார்" என இறையனார் களவியலுரையுள்ளும் வருதலானும் தமிழ் கடவுள்மாமொழியென்பது தேற்றென உணர்ந்து கொள்க.

---

1. சம்பந்தர் - அச்சிறுபாக்கம் - செ. 4.
2. திருமந்திரம் - ஆகமச் சிறப்பு.
3. காஞ்சிப் புராணம் - தழுவக் குழைந்த படலம். செ 248

## 3. 'தமிழ்'ச்சொன் முடிபு

இனித் 'தமிழ்' என்னுஞ் சொல் இனிமைப் பண்புணர்த்தும். அது "[1]தேன்உறை தமிழுந் திருஉறை கூடலு-மணத்தலின் மதிக்குல மன்னனாகியும்" என்னுங் கல்லாடத்தினானும், "[2]தமிழ் தழீஇய சாயலவர் தங்குமலர்த் தூநீர் - உமிழ்கரகம் ஏந்தவுர வோனமர்ந்துபூசி" என்னுஞ் சிந்தாமணியினானும், "[3]தமிழ்மென் சாய லவளோடும்" என்னும் வாயவ்விய சங்கிதையினானும், "வண்டு தமிழ்ப் பாட்டிசைக்குந் தாமரையே" என்னும் இராமாயணத்தினானும் தெளிக. "தமிழ்தழீஇய சாயலவர்" என்பதற்கு நச்சினார்க்கினியர் "இனிமை தழுவிய சாயலையுடையவர்" என்று பொருளுரைத்தார். தமிழ் என்னுந் தருமவாசகம் தருமி மேல் நின்றது; முருகு என்னும் பண்பு முருகனென்னும் பண்பி மேல் நின்றவாறுபோல. ஈண்டுத் தருமி மொழி. மொழியெனினும் பாடையெனினும் ஒக்கும். பிரயோக விவேக நூலார் "திரமிளமென்னும் ஆரியச்சொல் தமிழெனத் திரிந்து" என்று கொண்டாராலெனின்,— முதன்மையுடைய இம்மொழியைத் தோற்றிய காலத்து இறைவன் தன்சொல்லால் இதனை வழங்க இதற்குக் குறியீடு தருதலன்றிப் பிறபாடைச்சொல்லால் இதற்கு அன்னதோர் பெயரினைத் திரித்து நிறுத்தினானென்றல் பொருந்தாமையின், அது செல்லாதென மறுக்க.

இன்னும், இனிமைப்பொருளுணர்த்துந் தமிழென்னும் பண்புச்சொல் தன்சொல்லாய் இதன்கண் நிலைபெறுவதாகவும் அதனை விலக்கி அவ்வாறு கோடல் செல்லாமையுணர்க. இதனானே, "தமிழ் திராவிடமென்னும் வடமொழித் திரிபு" என்று கொண்டார் மதம் மறுக்கப்பட்டவாறும் அறிக. வடமொழிக் கடலுந் தென்மொழிக் கடலும்

1. கல்லாடம் - செ. 12.
2. சிந்தாமணி - செ. 2026.
3. வாயு சங்கிதை.



நிலைகண்டுணர்ந்த ஆசிரியர் சிவஞானயோகிகள் "[1]எவ்வினையு மோப்புதலால் திராவிடமென் றியல்பாடை" யென்று வடமொழியார் தன் மொழியால் தென்மொழியை ஆளுங் குறியீடு வேறு கூறிவைத்து, "[2]மூன்றுறழ்ந்த பதிற்றெழுத்தான் முழுவதுமா யுனக்கினிதாய்த் - தோன்றிடுமத் தமிழ்ப்பாடை" யென்று தென்மொழியார் தன்மொழியால் தென்மொழியை ஆளுங் குறியீடு யாங் கூறியவாறே பொருள்தெரித்து வேறு நிறுத்துதலின், இன்சொன்முடிபே தொல்லாசிரியர் வழக்காறாய்ப் பயின்றுபோதரும் இயன்முடிபென்பது அப்பெரியார்க்குங் கருத்தாதல் பெற்றாம். இன்னும், அகத்தியந் தமிழ்ச் சுதந்திர இலக்கணமுதனூலாகவும், அது வடமொழிப் "பாணினீய வியாகரணத்தின் வழித்தோன்றியதோர் நூலாம்" என்றும் அகத்தியத்தின் வழித்தோன்றியது தொல்காப்பிய இலக்கண நூலாகவும் அது வடமொழி "ஐந்திர வியாகரணத்தின் வழித்தோன்றியதோர் நூலாம்" என்றும், பிரயோக விவேக நூலார் முறை திறம்பி உரைத்தார். அவையெல்லாம் ஆரியாபிமானங் காரணமாக வரன்முறைதிறம்பிக் கூறினவேயாம். அவை வரன்முறை திறம்பிக் கூறியவாதல் முன்னர்க் காட்டுதும்.

இனித் தொல்லோராகிய தமிழ் நல்லாசிரியர் இருவகை வழக்கேபற்றித், தமிழ் இலக்கண இலக்கிய சாத்திர வரலாற்றின் உண்மைத் தன்மை துணிவுதோன்றச் சொல்லும் இதன்கண் அன்னரல்லராகிய இக்காலத்தார் சிலர் தமிழ் இலக்கண இலக்கிய வரலாறெனத் தாந்தாம் மனம் போந்தவாறெல்லாங் குழறுபாடாகக் கூறிய வசனங்களிற் படும் பொய்ப்பொருள்களை ஆசங்கித்தெடுத்து மறுத்துப் போதல் வேண்டற்பாலதொன்றுஅன்றாமாயினும், தமிழின் தொல்லை வரம்பு சிதையாமே அதனைப் பெரிது வளர்த்துவரும் இக்காலைச் சங்கத்து நல்லாசிரியர்களை வழிபட்டு அது

1. காஞ்சிப் புராணம் - தழுவக் குழைந்த படலம். 243
2. ,, ,, ,, 244

தன்னைக் கசடறக்கற்று உணரப் பெறாதார்மாட்டுப் பொது வகையால் ஒருவாறு தமிழ்பயிலு மாணாக்கர்களும், ஏனையோரும், அவர் பொய்த்திறம் மெய்த்திறமாங்கொலென்று கொண்டு புரைபடாமல் மற்றவற்றை மறுத்துஉண்மைநிலையிடலும் ஒருதலையாக வேண்டிச் செயற்பால தொன்றாய் முந்துறுதலின், அதுவும் இதன்கண் ஆண்டாண்டுக் கடைப்பிடித்துச் செய்து போதர ஒருப்படுகின்றாம். இது பாயிரத்துக் கூறினாமேனும், ஈண்டு அனுவதித்து ஞாபகஞ் செய்தாம்.

வீரசோழியப் பதிப்புரைகாரர் தமிழ்ச்சொற்கு முடிபு துணிபு தோன்றக் கூறுவார் போன்று தொடங்கி, "இகழ், இமிழ், உமிழ், கமழ், கவிழ், குமிழ், சிமிழ் என ழகரப்பேறு பெற்ற பதங்கள் போலத் தமிழ் என்னுஞ் சொல் தனிமைப் பொருள் குறித்த தமியென்னும் வினையடியாற் பிறந்து வினைமுதற்பொருளுணர்த்திய விகுதி குன்றி ழகரம் விரிந்து தனக்கிணையில்லாப் பாடையென்னும் பொருள் பயக்கும்" என்று பெரிதும் வழுப்படப் போலி முடிபு சொல்லினர். அவர் அச் சொற்குக் கூறிய அம்முடிபு போலியாதல் சிறிது காட்டுதும்.

இனிமைப் பொருள் பயக்குந் தமிழ் என்னும் இயற்சொல் தென்மொழியாய், அம்மொழிக்குப் பெயராதற்கு உரிமையுடைத்தாய் நிற்க, அதனை விலக்கித், "தமியென்னும் வினையடி வினைமுதற் பொருள் விகுதி குன்றி இகழ் முதலியன போல ழகரம் விரிந்து தமிழ் என்றாயது" என்று இடர்ப்பட்டு அவ்வாறு போலி முடிபு கூறுதல் அவர்க்குப் பெரியதோர் இழுக்காதல் காண்க. இனிமைப் பண்புணர்த்துந் தமிழ் தென்மொழிக்குப் பெயராதற்கு உரிமையுடைத்தாய் நிற்க, அதனை விலக்கி அங்ஙன முடிபு சொற்றது அவர் தமக்குப் பெரியதோர் இழுக்காமென்பது யாவரும் ஒப்பற்பாலதொரு நியாயவுரையாம். அது கிடக்க; "தமியென்னும் வினையடி வினைமுதற் பொருளுணர்த்தும் விகுதி குன்றி



இமிழ் முதலியனபோல ழகரம் விரிந்து தமிழ் என்றாயது" என்று அவர் கூறிய சொல்முடிபு போலியாதல் யாங்ஙனமெனின்—, கூறுதும்.

இக என்பது நீங்கென வினைப்பொருள்படும். இகழ் என்பதோஅவமதியென வேறு வினைப்பொருள்படும். இமியென்பது தமிழிற் பொருள் குறித்துவருஞ் சொல்லாதல்கண்டிலம். இமிழ் என்பதோ ஒலியெனப் வினைபொருள் முதற் பலபொருள்படும். உமி என்பது பெயர்ப்பொருள்படும். உமிழ் என்பதோ கொப்புளி எனவினைப்பொருள்படும். கமம் என்பது கமவென விதியீறாயின் நிறையென வினைப்பொருள் படும். கமழ் என்பதோ நாறு என வேறு வினைப்பொருள் படும். கவி என்பது மூடு என்னும் வினைப்பொருள் முதற் பல பொருள்படும். கவிழ் என்பதே கிழக்கிடு என வினைப் பொருள்படும். கிழக்கிடுதல் மேல் கீழாகச்செய்தல். குமி என்பது தமிழிற் பொருள்குறித்து வருவதோர் சொல்லாதல் கண்டிலம். குமிழ் என்பதோ முகை என்னும் வினைப் பொருள் முதற் பலபொருள்படும். சிமி என்பது குடுமியெனப் பெயர்ப் பொருள்படும். சிமிழ் என்பதோ பிணியென வினைப்பொருள்படும். இனி, இமி, குமி என்பன பொருண் குறித்து வரினும், அவர் கருத்து நிரம்பும் பொருள்குறித்து வருமாறில்லை. இவ்வாறு பொருள் குறித்துங் குறியாதும் வரும் இக இமி உமி கம கவி குமி சிமி என்னும் ஈரெழுத்து மொழிகள், அங்ஙனம் பொருள் குறித்து வரும் இகழ், இமிழ் உமிழ், கமழ், கவிழ், குமிழ், சிமிழ் என்னு மூவெழுத்து மொழிகளாய என்றல் சிறிதும் ஏலாது. இதனால் அவர் காட்டு உவமைப் போலியேயாம். காட்டு உவமைப் போலியாகவே, அவைபோலத் தமி ழகரம் விரிந்து தமிழ் என நின்றதென அவர் சாதித்த முடிபு சிறிதும் உணர்வில்லார் உரையேயாய் வெறும் போலியாதல் காண்க. இன்னும், தனிச் சொல்லிறுதிக்கண் ஆன் மான் கோனெனச் சாரியை பொருள் குறித்து வந்தியைந்து நிற்பதல்லது கொன்னே யெழுத்து விரிந்து நிற்றல் வழக்கிரண்டினுங் காணாமையானும் அது போலி முடிபே யாமென்று மறுக்க.

## 4. "தென்மொழி" முடிபு

ஆரியம், 'சமஸ்கிருதம்' என இரு மொழியினாற் பெயர் பெறுதல் போலத் தமிழுந் 'தென்மொழி' யென இருமொழியினாற் பெயர்பெறும். தென்மொழி அழகுடைய பாடை. ஈண்டு அழகு இயல் வரம்பு இயலெனினும் இலக்கணமெனினும் பொருந்தும். இனித் தென்மொழி என்பதற்கு இசையுடைய மொழியென்று பொருள் கூறினும் பொருந்தும். ஈண்டு இசை என்றது கரணத்தினாற் செயற்படுத்திக் காணும் இசையன்றி இயல்பாக இயைந்து மொழியோடு தோற்று மெல்லோசை இன்பமாம். இவ்வோசை இன்பம் இதற்குப்போல ஏனைப் பாடைகளுக்கு அத்துணை வாய்ப்பப் பொருந்தாமை செவிப்புல அனுபவத்தினாற் காண்க. இவ்வோசையின்பம் வடமொழிக்கின்றோவெனின்,—வடமொழிக்கண்ணும் இவ்வோசையின்பம் உண்டு. ஆயினும் அது உரப்பியும் எடுத்துங் கனைத்துங் கூறும் வல்லோசைகளோடு விரவித் திரிபெய்துதலின், வல்லோசையோடு விரவாமல் மெல்லோசையே பயின்ற இதற்கே அது சிறப்பாமென்றுணர்க. தமிழ்நூலாருங் 'கசடதபற' வென வல்லெழுத்துக்கள் கொள்வராலெனின்,—அவை 'ஙஞணநமன' 'யரலவழள' வென்னும் எழுத்தோசையை நோக்க வல்லோசையாக இசைத்தல் பற்றி அவ்வாறு கொள்பவாயினும்; வடமொழிக்கண் வருக்க பஞ்சகத்தின் இடைப்பட்டு நடக்கும் அவ் வல்லெழுத்துக்களை நோக்க அவையும் மெல்லெழுத்தென்றே சொல்லப்படுமாதலால், அது கடாவன்றென்க, மொழியொடு இயல்பாகப் பொருந்தியியலும் இவ்வின்னிசை இதற்குச் சிறத்தலினன்றே இறையனார் 'தமிழ்' எனப் பண்பால் விதந்து இதற்கு ஆதிக்கண் குறியீடு செய்வாராயினதூஉம் என்றுணர்க.

இவ்வாற்றால், தமிழ், தென்மொழியென்பன ஒருமொழி தொடர்மொழியாய் வேறுபடினும் பொருளால் ஒற்றுமை உடையனவேயாமென்று கடைப்பிடிக்க.



தென்மொழி யென்பதன்கண் தென்னென்பது வடமொழியின்கண் வட வென்பது போலத் திசை குறிக்குஞ் சொல்லேயாகலின், அவ் வடமொழிக்கு அழகு இசையென அங்ஙனம்பொருளுரைத்தல்பொருந்தாதபிறவெனின்,—ஆரியமொழி வடநாட்டின்கண்ணின்று தென்னாட்டின்கண் வந்து வழங்குதலின், தென்னாட்டாராகிய தமிழ்மாந்தர் அதனை வடமொழியென்று அங்ஙனந் திசையடுத்துவிசேடித்தல் வழக்காறும்; தென்னாட்டினர் தமிழெல்லைக்குள் இருந்து அதனைத் தென்மொழியென்று திசையடுத்து அங்ஙனம் கொண்டு விசேடித்தல் வேண்டாமையின் அது வழக்காறு காது; அதனால் தென்னென்பது திசைப்பொருள் குறித்து வந்த அடைமொழியன்று; அழகு இசையென்பன குறித்து வந்த அடைமொழியேயாம். இங்ஙனமாகலின் பொருந்தாமை யாண்டையதென்க. இனித் தென்னாட்டினர் தமிழினை அங்ஙனம் விசேடித்தல் செல்லாதேனும். வடநாட்டினர் தென்னாட்டு வழங்குதல்பற்றித் தமிழ்மொழியினை அவ்வாறு திசையடுத்து விசேடித்தல் செல்லுமெனின்,—வடநாட்டார் அங்ஙனந் தமிழினைத் தம் மொழியால் அப்பொருள்படக் குறியீடு செய்து வழங்குதல் செல்லுமல்லது, அவர் தமிழினால் அதனைத் தென்மொழியென்று அங்ஙனந்திசையடுத்து விசேடித்து வழங்குவரென்றல் செல்லாமையின், அது தடையாகாதென்க. தடை - ஆசங்கை

இனிப் பரதகண்டத்தினை வடபுலந் தென்புலமென இரண்டுபடக்கொண்டு வழங்கு முறைபற்றித் தென்னாட்டினர் தந்நாட்டு மொழியாகிய தமிழினைத் தென்மொழியென்று திசையடுத்து அங்ஙனம் விசேடித்தல்செல்லுமெனினும், அவ்வழக்கு அவ்விரு மொழிகளையும் வடமொழி தென்மொழியென ஒன்றோடு மற்றொன்றினை யெதிர்தந்து கூறும் வழிச் செல்லுதலன்றித்தென்மொழியென்று தனித்துக்கூறும் வழியுஞ் செல்லுமென்றல் நிரம்பாது; நிரம்பினும், தமிழை அழகு இசையென்னும் பொருள்கள் பற்றித் தென்மொழியென்று அவ்வாறு விசேடித்தலை அதுதடுக்கும்வலியுடைத்தாதல் இல்லை. அதனால், 'தென்மொழி' 'தென்சொல்'

தென்கலை' யெனப் பயின்று தனித்து வழங்குந் தொடர் மொழிகளின்கண்பட் டியலும் அவ்வடைமொழிக்கு யாங் கூறிய பொருள் சிறப்புடைப் பொருளாமென்று கடைப் பிடிக்க.

### 5. தமிழ்ப் பொதுவெல்லை

ஆரியமொழி இப்புடவியிற் புண்ணிய பூமியெனச் சிறந் தெடுத்தோதப்படுங் குமரிக்கண்டத்தின் வடபாலைத்தனக்கு முக்கிய நிலைக்களமாகக்கொண்டு பயில்வதாகத் தமிழ் மொழி அதன் தென்பாலைத் தனக்கு முக்கிய நிலைக்களமாகக் கொண்டு பயில்வதாயிற்று. தென்பால் நிலத்து மற்றிதற் கெல்லை வடக்கண் வேங்கடமும் தெற்கண் குமரியும், கிழக்கு மேற்குங் கடலுமாம். அது, "[1]வடவேங்கடந் தென் குமரி - யாயிடைத் - தமிழ்கூறு நல்லுலகத்து" எனவருந் தொல்காப்பிய உபோற்காதச் சூத்திரத்தானும், "[2]நெடி யோன் குன்றமுந் தொடியோள் பௌவமுந் - தமிழ்வரம் பறுத்த தண்புனல் நாட்டு" எனவருஞ் சிலப்பதிகாரச் செய்யுளானு மறிக. "[3]வடதிசை மருங்கின் வடுகுவரம் பாகத் - தென்திசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும் - வரை மருள் புணரி யொடு பொருது கிடந்த - நாட்டியல் வழக்க நான்மையின் கடைக்கண் - யாப்பின திலக்கண மறைகுவன் முறையே" எனச் சிறுகாக்கைபாடினியார் தெற்குங் கடல் எல்லை கூறியது குமரியாறு கடல்கொண்ட பிற்காலத்துச் செய்ததென அறிக." தமிழ் வரம்பு இங்ஙனஞ் சிதைந்து வேறுபட்டுச் சுருங்கியதுபோல அகன்றுவிரிந்ததும்உண்டு. தமிழ் அவ்வாறு வளர்ந்து அகன்று விரிந்தன ஈழநாடு முதலியவாம்.

இனித் தென்னாடு 'தமிழ்நாடு' என்பது அடிப்பட்டு வரும் வழக் காகலானும், மற்றதன்கண் தமிழ்மொழிக்கு

1. தொல் - சிறப்புப்பாயிரம் - பனம்பாரனார் பாடல்.
2. சிலப்பதிகாரம் - வேனிற்காதை - க.
3. தொல் - பாயிரவிருத்தி - உதாரணச்செய்யுள்.



முற்பட்டு வழங்கி வீழ்ந்ததோர் மொழியுண் டென்பதற்குப் பிரமாணம் இன்மையானும். தமிழ்மொழி தென்னாடு தோன் றுங் காலத்துஉடன்தோன்றிஅதன்கண் வாழும்நன்மக்கள் பயிலு மொழியாயிற் றென்பது தேற்றமாம்.

### 6. செந்தமிழ் நிலம்

இனிச் செந்தமிழ் நிலம் இப் பொது எல்லையுள் வைத்து வரைந்துகொள்ளப்படும். தொல்காப்பியஉரையாசிரியர்கள் செந்தமிழ் நிலம் "வையையாற்றின் வடக்கு மருதயாற்றின் தெற்குங் கருவூரின் கிழக்கு மருவூரின் மேற்குமாம்" என்பர். இதனாற்செந்தமிழ்நிலஞ்சோணாடாயிற்று. திராவிடமாபாடிய முனிவர் "[1]காசியினின்றும் போந்து கம்பர்தாமருளப் பெற்று - மாசிலாக் கச்சி மூதூர் மன்னிவீற் றிருந்து பூமே லாசிலாத் தமிழ்ப ரப்பி யருந்தமிழ்க் குரவு பூண்ட, தேசினன் மலைய வெற்பிற் குறுமுனிதிருத்தாள் போற்றி" எனக் காஞ் சிப்புராணமுகத்து அகத்தியனாரை வாழ்த்து முகத்தானே செந்தமிழ் நிலந் தொண்டைநாட்டுக் காஞ்சிநகர் வரைப் பென் றுணர்த்துவர். நன்னூல் விருத்தியுரைகாரர் செந் தமிழ் "[2]சந்தனப்பொதியச்செந்தமிழ் முனியுஞ்-சௌந்தர பாண்டிய னெனுந்தமிழ் நாடனுஞ் - சங்கப் புலவருந்தழைத் தினி திருக்கும் - மங்கலப் பாண்டி வளநாடென்ப" என் றுரைப்பர். சேர சோழ பாண்டியமன்னர்களைத்"தமிழ்நாட்டு மூவேந்தர்" என யாண்டும் வழங்குதலானும், கடைச்சங்கப் புலவர் சீத்தலைச்சாத்தனார் திருக்குறள் உபோற்காதத்துள்

> [3]"மும்மலையும் முந்நாடும் முந்நதியும் முப்பதியும்
> மும்முரசும் முத்தமிழும் முக்கொடியும் - மும்மாவுந்
> தாமுடைய மன்னர் தடமுடிமேல் தாரன்றோ
> பாமுறைதேர் வள்ளுவர்முப் பால்"

என

1. காஞ்சிப்புராணம் - பாயிரம் - தமிழாசிரியர் வாழ்த்து.
2. நன்னூல் விருத்தி உரைமேற்கோள் - பெயரியல் 14
3. திருவள்ளுவமாலை. செ. 10.

மூத்தமிழையும் அம் மூவர்க்கும் உடைமையாக்கிச் செந்தமிழ் உத்தரவேதத்தினை அவர்தம் "முடிமேற்றூர்" எனப் பொதுவாக ஓதுதலானும், பத்துப்பாட்டு எட்டுத்தொகை முதலிய சங்க இலக்கியங்களுள் சில அம்மூவர்மேலவாகியும் சில ஒவ்வொருவர் மேலவாகியும் வருதலானும், ஆளுடைய பிள்ளையார் முதலிய சமயாசாரியர் நால்வரும், சேரமான் பெருமாள் முதலிய மற்றை யுண்மை நாயன்மாரும் அருளிச்செய்த திருநெறிச் செந்தமிழ் வேதமுதலிய திருவருட் பாடல் கொண்ட திருத்தளிகள் தமிழ்நாட்டுள் ஒன்றன்பாலது ஆதலின்றி முந்நாட்டகத்துமுண்மையானும்பிறவாற்றானும் செந்தமிழ்நிலந் தமிழ் முந்நாட்டகத்தும் ஒப்பக் கொள்ளப் படுமென்க. அஃதேல், திருநெறிச் செந்தமிழ் வேதத் திருப்பாடல் கொண்ட திருத்தளிகள் வடக்கண் திருக்கயிலாயங் கேதார முதற் சிலவும், தென்கீழ்த்திசைக்கண் திருக்கோணமாமலை திருக்கேதீச்சர மெனச் சிலவும் உள்ளனவன்றே. அவ்வாற்றால் அவையெல்லாஞ் செந்தமிழ் நிலமாவான் செல்லும் பிறவெனின்,—"வடவேங்கடந் தென்குமரி, யாயிடைத்-தமிழ்கூறு நல்லுலகத்" தின் கண்ணது இவ்வாராய்ச்சியாகலின், அது கடா அன்றென்றொழிக. மற்றெவ்விடனையினுமாகுக. ஒருநிலத்தின்கண் முந்துநூல்பற்றி வழக்குஞ் செய்யுளுமாகிய செந்தமிழாராயலுறும் நன்மக்களுளராங்கால் அதுதன்னைச் செந்தமிழ் நிலன் அன்றென விலக்கல் கூடாது. என்னை? இலக்கணம் உள்வழி இலக்கியமாதல் ஒருதலையாகலி னென்பது. மற்றுத் தமிழ் செவ்வனாராயு நன்மக்களுளராதல் பற்றிச் செந்தமிழ் நிலனென வழங்கப்பட்டது; பிற்காலத்து அவ்வாராய்ச்சி வீழ்ந்து, பிறிதொரு பயிற்சிக்கிடனாகுங்கால், அதுதான், முற்பொழுதானன்றி அப் பிற்பொழுதானுஞ் செந்தமிழ் நிலனென்று செல்லாது. என்னை? இலக்கணஞ் சிதைவுழி இலக்கியம் நிலைபெறுதல் கூடாமையினென்பது.

இனிப் "[1]பண்ணரியற்றமிழ்ப்பாண்டியற்காகவே" எனச் செந்தமிழ் வேதத்தும், "[1]உயர்மதிற் கூடலின் ஆய்ந்த வொண் தீந்தமிழின் - துறைவாய் நுழைந்தனையோ" என எட்டாந்திருமுறையான திருக்கோவையுள்ளும், "[2]சென்றணைந்து மதுரையினில்திருந்தியநாற்சங்கத்து-என்றிருந்து தமிழாராய்ந் தருளிய அங் கணர்கோயில்" "[3]தேம் பொழில்சூழ் செந்தமிழ்நாட் டினிலெங்குஞ் சென்றிறைஞ்சி" "[4]செய்வார் கன்னித் தமிழ்நாட்டுத்திருமா மதுரைமுதலான "[5]பானல் வடற் றமிழ் நாடு" "[6]நன்றியினெறியி லழுந்திய நாடு நற்றமிழ்வேந்தனு முய்ந்து" என்றல் தொடக்கத்தாற் பன்னிரண்டாந் திருமுறையான திருத்தொண்டர் புராணத்துள்ளும், "[7]தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்-மகிழ்நனை மறுகின் மதுரையும்" "[8]தேனுறை தமிழுந் திருவுறை கூடலு - மணத்தலின் மதிக்குல மன்ன னாகியும்" "வண்டுறை வார்பொழில் சூழ்நறை யாற்றுமன் னுடைவைவேல் - கொண்டுறை நீக்கிய தென்னவன் கூடற் கொழுந்தமிழின் - ஒண்துறை மேலுள்ள மோடியதோ" "ஆமாறறிபவர் யாரே விதியை யந்தீந்தமிழ்நர்-கோமான்" என்றல்தொடக்கத்தாற் சிறுபாணாற்றுப்படை கல்லாட முதலியசங்கச்செய்யுளுள்ளும் இறையனார் களவியலுரையுள்ளும் பெரும்பான்மையான் வருதலின், பாண்டிவளநாடு ஏனைச் சேர சோழ வளநாடுகளினும், செந்தமிழ் ஆராய்ச்சிக்குச் சிறப்புடைத்தாயிற்றென்பது கடைப்பிடித்து உணரப்படு மென்க.

1. சம்பந்தர் - திருவாலவாய்த் தேவாரம் 'செய்யனே பதிகம். செ - 5.

1. திருக்கோவையார் - 20
2. திருநாவுக்கரசு நாயனர் புராணம். செ. 403.
3. ,, ,, 412.
4. சேரமான் பெருமாணயனர் புராணம். 81.
5. சம்பந்தர் புராணம் - 652
6. ,, ,, 656
7. கல்லாடம் - 12.
8. சிறுபாணாற்றுப் படை வரி 66 - 67.

எ. செந்தமிழ்ச்சொல்

இனிச் செந்தமிழ்ச் சொல் 'இயற்சொல்' என்றும் 'திரிசொல்' என்றும் இருவகைப்படும். இயற்சொல்லாவன: [1]"அவற்றுள், இயற் சொற்றாமே - செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித் - தம்பொருள் வழாமை இசைக்குஞ் சொல்லே" என்னும் எச்சவியற்சூத்திரத்தா னுணர்க. அவை நிலம், நீர், தீ, வளி, வெளி, உயிர், உடம்பு என்னுந் தொடக்கத்தன. திரிசொல்லாவன : [2]"ஒருபொருள் குறித்த வேறு சொல்லாகியும் - வேறுபொருள் குறித்த ஒருசொல்லாகியும் - இருபாற் றென்ப திரிசொற் கிளவி" என்னும் எச்சவியற் சூத்திரத்தா னறிக. வடநூலார் ஒருபொருள் குறித்துவரும் வேறுசொல்லைச் 'சமானார்த்தகபதம்' என்றும் வேறு பொருள் குறித்து வருமொருசொல்லை 'நானார்த்தகபதம்' என்றுங்கூறுவர். வெற்பு, விண்டு, விலங்கல் என்பன ஒரு பொருள் குறித்த வேறு பெயர்க்கிளவி. எகினம் என்பது அன்னமுங் கவரிமாவும் புளிமாவும் நாயு முணர்த்தலானும் ஆ என்பது பெற்றமும் ஒருமர விசேடமும் இரக்கக்குறிப்பும், ஆதற்புடைபெயர்ச்சியு முணர்த்தலானும், 'உந்தி' என்பது யாழ்ப்பத் தலுறுப்புங் கொப்பூழுந் தேர்த்தட்டுங் கான்யாறு முணர்த்தலானும், இவை வேறுபொருள் குறித்த ஒருசொல். இவை பெயர்த்திரிசொல். 'பாடித்தை' 'செப்பீமன்' 'ஈங்கு வந்தீத்தாய்' 'புகழ்ந்திகு மல்லரோ' 'பெறலருங்குரைத்து, இவை வினைத்திரிசொல். இடையு முரியுந் திரிசொல்லாய் வருமேனு முணர்க.

இனித் திசைச்சொற்களும் வடசொற்களுஞ் செந்தமிழ்ச் சொற்களோடு தலைப்பெய்து வழங்கப்படும். திசைச்சொற்களாவன: [3]"செந்தமிழ்சேர் ந்தபன்னிரு நிலத்துந்- தங்குறிப் பினவே திசைச்சொற்கிளவி" என்னும் எச்சவியற்சூத்திரத்

1. தொல் - சொல் - எச்சவியல் - 2.
2. ,, ,, 3
3. ,, ,, 4



தா னறிக. பன்னிரு நிலமாவன : பொங்கர் நாடு, ஒளிநாடு, தென்பாண்டியநாடு, குட்டநாடு, குடநாடு பன்றிநாடு, கற்காநாடு, சீதநாடு, பூழிநாடு, மலைநாடு, அருவாநாடு, அருவா வடதலை நாடு எனத் தென்கீழ்ப்பால் முதலாக வடகீழ்ப்பாலீறாக எண்ணிக் கொள்க.

இனி இப்பன்னிரண்டையும் புறஞ் சூழ்ந்து வேறு பன்னிரு நிலமு முள : அவை சிங்களமும், பழந்தீவும், கொல்லமும், கூபமும், கொங்கணமும், துளுவும், குடகமும், கருநடமும், குட்டமும், வடுகும், தெலுங்கும்' கலிங்கமுமா மென்பர், நச்சினார்க்கினியர். இனி வடசொல்லாவன : [1]"வடசொற், கிளவி வடவெழுத் தொரீஇ - யெழுத்தொடு புணர்ந்த சொல்லா குமே" என்னு மெச்சவியற் சூத்திரத் தானறிக. வடவெழுத்தொரீஇ எழுத்தொடு புணர்ந்த வெனவே, பொது வெழுத்தானியன்ற வடசொற்கள் செந்தமிழிற் பயின்றுவருமென்பது தானே பெறப்படும். அவை 'வாரி' மேரு, குங்குமம், மணி என்னுந் தொடக்கத்தன. வடசொற்கேயுரிய சிறப்பெழுத்தி னீங்கி இருசார்மொழிக்கும் பொதுவாகிய எழுத்தானியன்ற சொற்கள் 'விதி' உற்பலம், தற்பவம், அற்புதம்' என்னுந் தொடக்கத்தன. இன்னும், தொல்காப்பியனார் [2]"சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்" என்றோதுதலின், பொதுவெழுத்தானியன்றனவே யன்றி வடவெழுத்தானியன்றவடசொற்சிதைந்துவரினும் பொருத்தமுடையன கொள்ளப்படும். அவை "அரமிய வியலகத் தியம்பும்" "தசநான் கெய்திய பணைமருள் நோன்றாள்" "கடுந்தோ ரிராம னுடன்புணர் சீதையை" "பேதையல்லை மேதையங் குறுமகள்" என்னுந் தொடக்கத்தன.

இனிப்பிரயோக விவேகநூலார் "உரிச்சொல்லென்பது பதினெண் தேசிகச்சொல் வடசொல்லெனத் தொகையாற்

1. தொல் - சொல் - எச்சவியல். 5.
2. ,, ,, ,, 6.

